உ

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் பாடிய

# பாப்பா பாட்டு





பரலி. சு. நெல்லையப்ப பிள்ளையால்
பதிப்பிக்கப்பட்டது.





ஆசிரியர் சுப்பிரமணிய பாரதியார் பாடிய

# பாப்பா பாட்டு.



ஓடி விளையாடு *பாப்பா—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா. க

சின்னஞ் சிறு குருவி போலே—நீ
திரிந்து பறந்து வா பாப்பா
வன்னப் பறவைகளைக் கண்டு—நீ
மனதில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா. உ

* பாப்பா என்ற பதத்தைப் பாடுவோர் இஷ்டப்படி மாற்றிக்கொள்ளலாம்.

கொத்தித் திரியு மந்தக் கோழி—அதைக்
கூட்டி விளையாடு பாப்பா
எத்தித் திருடுமந்தக் காக்காய்—அதற்
கிரக்கப் படவேணும் பாப்பா. ௩

பாலைப் பொழிந்து தரும் பாப்பா—அந்தப்
பசு மிக நல்லதடி பாப்பா
வாலைக் குழைத்து வரும் நாய் தான்—அது
மனிதர்க்குத் தோழனடி பாப்பா. ௪

வண்டி யிழுக்கும் நல்ல குதிரை—நெல்லு
வயலில் உழுது வரும் மாடு
அண்டிப் பிழைக்கும் நம்மை ஆடு—இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா. ௫

காலை யெழுந்த வுடன் படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு—என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா. ௬

பொய் சொல்லக் கூடாது பாப்பா—என்றும்
புறஞ் சொல்ல லாகாது பாப்பா
தெய்வ நமக்குத் துணை பாப்பா—ஒரு
தீங்கு வர மாட்டாது பாப்பா. ௭

பாதகஞ் செய்பவரைக் கண்டால்—நாம்
பயங் கொள்ள லாகாது பாப்பா
மோதி மிதித்து விடு பாப்பா—அவர்
முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா. அ

துன்பம் நெருங்கி வந்தபோதும்—நாம்
சோர்ந்து விட லாகாது பாப்பா
அன்பு மிகுந்த தெய்வமுண்டு—துன்பம்
அத்தனையும் போக்கி விடும் பாப்பா. கூ

சோம்பல் மிகக்கெடுதி பாப்பா—தாய்
சொன்ன சொல்லைத் தட்டாதே பாப்பா
தேம்பி யழுங் குழந்தை நொண்டி—நீ
திடங்கொண்டு போராடு பாப்பா. க௦

தமிழ்த் திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
அமிழ்தில் இனியதடி பாப்பா—எங்கள்
ஆன்றோர்கள் தேசமடி பாப்பா. கக

சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே—அதைத்
தொழுது படித்திடடி பாப்பா
செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம்—அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா. கஉ

வடக்கில் இமயமலை பாப்பா—தெற்கில்
வாழுங் குமரி முனை பாப்பா
கிடக்கும் பெரிய கடல் கண்டாய்—இதன்
கிழக்கிலும் மேற்கிலும் பாப்பா. ௧௩

வேதமுடைய திந்த நாடு—நல்ல
வீரர் பிறந்த திந்த நாடு
சேதமில்லாத ஹிந்துஸ்தானம்—இதைத்
தெய்வமென்று கும்பிடடி பாப்பா. ௧௪

சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்
நீதி, உயர்ந்த மதி, கல்வி—அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர். ௧௫

உயிர்களிடத்தில் அன்பு வேணும்—தெய்வம்
உண்மை யென்று தானறிதல் வேணும்
வயிர முடைய நெஞ்சு வேணும்—இது
வாழும் முறைமையடி பாப்பா. ௧௬



MADRAS DIAMOND PRESS, PERIAMET.

உ

# நாட்டுப் பாட்டு

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் பாடியது.




பரலி. சு. நெல்லையப்ப பிள்ளை.

## முகவுரை.

இந்த நூலுக்கு ஒரு பெரிய முகவுரை எழுத வேண்டியது அவசியமில்லை.

இதன் ஆசிரியர்—தெய்வம் கண்ட கவி. இவரைப் பற்றி எழுதவேண்டுமானால் இது போன்று பல புஸ்தகங்கள் வேண்டும். இதிலுள்ள பாடல்களில் சில முன் வெளியானவை.

இந்த நூலிலுள்ள பாடல்களைத் தமிழர் ஒவ்வொருவரும் படித்து மகிழ வேண்டுமென்பது எனது விருப்பம்.

எனது தாய்த்திருநாட்டைப் புகழும் இத்தகைய பாடல்களைப் பாடி மகிழுமாறு யான் இந்த நாட்டிலே கோடிக் கோடி பிறப்பு பிறக்க வேண்டுமென்று விரும்புகிறேன். அண்ட சராசரங்கள் அனைத்தையும் ஆக்கியும் காத்தும் மாய்த்தும் வரும் பரம்பொருளின் பெரும் புகழை ஒருவன் எவ்வளவு காலந்தான் புகழ்ந்து போற்றினும் ஆவல் தீருமா? அது போல இந்த தெய்விகத் திருநாட்டின் பெருமைகளை ஒருவன் எவ்வளவு காலந்தான் புகழ்ந்து பாடினும் ஆவல் தீராது.

எந்தாய் வாழ்க! வந்தே மாதரம்!

சிந்தாத்திரிப்பேட்டை, சென்னை:
பிங்கள, புரட்டாசி க. } நெல்லையப்பன்.

# வந்தே மாதரம்.

தாயுமானவர் ஆனந்தக்களிப்பு மெட்டு.

ராகம்—நாதநாமக் கிரியை : தாளம்—ஆதி.

### பல்லவி.

வந்தே மாதர மென்போம்—எங்கள்
மாநிலத் தாயை வணங்குது மென்போம் (வந்)

### சரணங்கள்.

1. ஜாதி மதங்களைப் பாரோம்—உயர்
ஜன்ம மித்தேசத்தி லெய்தின ராயின்
வேதிய ராயினு மொன்றே—அன்றி
வேறு குலத்தின ராயினு மொன்றே (வந்)

2. ஒன்று பட்டாலுண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கி லனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தாற்பின் நமக்கெது வேண்டும்? (வந்)

3. எப்பதம் வாய்த்திடு மேனும்—நம்மில்
யாவர்க்கு மந்த நிலை பொதுவாகும்
முப்பது கோடியும் வாழ்வோம்—வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம் (வந்)



ஓம்.

வந்தே மாதரம்.

# நாட்டுப் பாட்டு



## செந்தமிழ் நாடு.

செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே—எங்கள் (செந்தமிழ்) 1

வேதம் நிறைந்த தமிழ் நாடு—உயர்
வீரம் செறிந்த தமிழ் நாடு—நல்ல
காதல் புரியும் அரம்பையர் போலிளங்
கன்னியர் சூழ்ந்த தமிழ் நாடு. (செந்தமிழ்) 2

காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்ட தோர் வையை பொருனை நதி—என
மேவிய யாறு பல வோடத்—திரு
மேனி செழித்த தமிழ் நாடு. (செந்தமிழ்) 3

முத்தமிழ் மாமுனி நீள் வரையே நின்று
மொய்ம் புறக் காக்குந் தமிழ் நாடு—செல்வம்
எத்தனை யுண்டு புவி மீதே—அவை
யாவும் படைத்த தமிழ் நாடு. (செந்தமிழ்) 4

நீலத் திரைக் கட லோ ரத்திலே—நின்று
நித்தந் தவஞ் செய் குமரி யெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடை யே புகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ் நாடு (செந்தமிழ்) 5

கல்வி சிறந்த தமிழ் நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ் நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ் நாடு. (செந்தமிழ்) 6

வள்ளுவன் தன்னை உல கினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ் நாடு—நெஞ்சை

அள்ளும் சிலப்பதி கார மென் ரேர் மணி
யாரம் படைத்த தமிழ் நாடு. (செந்தமிழ்) 7

சிங்களம் புட்பகம் சாவக மாதிய
தீவு பலவினுஞ் சென்றேறி—அங்கு
தங்கள் புலிக் கொடி மீன் கொடியும் நின்று
சால்புறக் கண்டவர் தாய் நாடு. (செந்தமிழ்) 8

விண்ணை யடிக்கும் தலை யிமயம்—எனும்
வெற்பை யடிக்கும் திறனுடையார்—சமர்
பண்ணிக் கலிங்கத் திருள் கெடுத்தார் தமிழ்ப்
பார்த்திவர் நின்ற தமிழ் நாடு. (செந்தமிழ்) 9

சீன மிசிரம் யவனரகம்—இன்னும்
தேசம் பலவும் புகழ் வீசிக்—கலை
ஞானம் படைத் தொழில் வாணிப மும் மிக
நன்று வளர்த்த தமிழ் நாடு. (செந்தமிழ்) 10

---

## பாரத தேசம்.

பாரத தேச மென்று பெயர் சொல்லுவார்—மிடிப்
பயங் கொல்லுவார் துயர்ப்பகை வெல்லுவார்.

வெள்ளிப் பனி மலையின் மீதுலவு வோம்—அடி
மேலைக் கடல் முழுதுங் கப்பல் விடுவோம்
பள்ளித் தல மனைத்துங் கோயில் செய்கு வோம்-எங்கள்
பாரத தேச மென்று தோள் கொட்டு வோம். 1

சிங்களத் தீவினுக் கோர் பால மமைப்போம்
சேதுவை மேடுறுத்தி வீதி சமைப் போம்
வங் கத்தி லோடிவரும் நீரின் மிகையால்
மையத்து நாடுகளிற் பயிர் செய்குவோம். 2

வெட்டுக் கனிகள் செய்து தங்க முதலாம்
வேறு பல பொருளுங் குடைந் தெடுப் போம்
எட்டுத் திசை களிலுஞ் சென்றிவை விற்றே
எண்ணும் பொருளனைத்தும் கொண்டு வருவோம். 3

முத்துக் குளிப்ப தொரு தென் கடலிலே
மொய்த்து வணிகர் பல நாட் டினர் வந்தே
நத்தி நமக்கினிய பொருள் கொணர்ந்து
நம்மருள் வேண்டுவது மேற் கரையிலே. 4

சிந்து நதியின் மிசை நிலவினிலே
சேர நன் னாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங் கினிற் பாட்டி சைத்துத்
தோணிக ளோட்டி விளையாடி வரு வோம். 5

கங்கை நதிப்புரத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்ளுவோம்
சிங்க மராட்டியர் தங் கவிதை கொண்டு
சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம். 6

காசி நகர்ப்புலவர் பேசு முரைதான்
காஞ்சியிற் கேட்பதற் கோர் கருவிசெய்வோம்
ராச புத்தானத்து வீரர் தமக்கு
நல்லியற் கன்னடத்துத் தங்க மளிப்போம். 7

பட்டினி லாடையும் பஞ்சி லுடையும்
பண்ணி மலைகளென வீதி குவிப்போம்.
கட்டித் திரவியங்கள் கொண்டு வருவார்
காசினி வணிகருக் கவை கொடுப்போம். 8

ஆயுதம் செய் வோம் நல்ல காகிதம் செய் வோம்
ஆலைகள் வைப்போம் கல்விச் சாலைகள் வைப்போம்

ஓயுதல் செய்யோம் தலை சாயுதல் செய் யோம்
உண்மைகள் சொல்வோம் பல வண்மைகள் செய்வோம்.

குடைகள் செய்வோம் உழு படைகள் செய்வோம்
கோணிகள் செய்வோம் இரும்பாணிகள் செய்வோம்
நடையும் பறப்பு முணர் வண்டிகள் செய்வோம்
ஞாலம் நடுங்க வரும் கப்பல்கள் செய் வோம். 10

மந்திரங் கற்போம் வினைத் தந்திரங் கற்போம்
வானை யளப்போம் கடல் மீனை யளப் போம்
சந்திர மண் டலத்தியல் கண்டு தெளி வோம்
சந்தி தெருப் பெருக்கும் சாத்திரங் கற்போம். 11

காவியஞ் செய் வோம் நல்ல காடுவளர்ப் போம்
கலை வளர்ப்போம் கொல்ல ருலை வளர்ப் போம்
ஓவியம் செய்வோம் நல்ல ஊசிகள் செய்வோம்
உலகத் தொழில னைத்து முவந்து செய்வோம். 12

சாதி இரண் டொழிய வேறில்லை யென்றே
தமிழ் மகள் சொல்லிய சொல் அமிழ்த மென் போம்
நீதி நெறி யினின்று பிறர்க் குதவும்
நேர்மையர் மேலவர் கீழவர் மற்றோர். (பாரத) 13

## நாட்டு வணக்கம்

சுதேச வந்தனம்.

காம்போதி ராகம், ஆதிதாளம்.

எந்தையுந் தாயு மகிழ்ந்து குலாவி
யிருந்தது மிந்நாடே—அதன்
முந்தைய ராயிர மாண்டுகள் வாழ்ந்து
முடிந்தது மிந்நாடே—அவர்
சிந்தையி லாயிர மெண்ணம் வளர்ந்து
சிறந்தது மிந்நாடே—இதை
வந்தனை கூறி மனதி லிருத்தியென்
வாயுற வாழ்த்தேனோ—இதை
(பல்லவி) வந்தே மாதரம் வந்தே மாதரம்
என்று வணங்கேனோ. (1)

இன்னுயிர் தந்தெமை யீன்று வளர்த்தரு
ளீந்தது மிந்நாடே—எங்கள்
அன்னையர் தோன்றி மழலைகள் கூறி
அறிந்தது மிந்நாடே—அவர்
கன்னிய ராகி நிலவினி லாடிக்
களித்தது மிந்நாடே—தங்கள்

பொன்னுட லின்புற நீர்விளை யாடியில்
போந்தது மிந்நாடே—இதை
(பல்லவி) வந்தே மாதரம் வந்தே மாதரம்
என்று வணங்கேனோ. (2)

மங்கைய ராயவர் இல்லற நன்கு
வளர்த்தது மிந்நாடே—அவர்
தங்க மதலைக ளீன்றமு தூட்டித்
தழுவிய திந்நாடே—மக்கள்
துங்க முயர்ந்து வளர்கெனக் கோயில்கள்
சூழ்ந்தது மிந்நாடே—பின்னர்
அங்கவர் மாய அவருடற் பூந்துகள்
ஆர்ந்தது மிந்நாடே—இதை
(பல்லவி) வந்தே மாதரம் வந்தே மாதரம்
என்று வணங்கேனோ. (3)

---

## எங்கள் நாடு.

(பூபாள ராகம்.)

மன்னு மிமய மலை யெங்கள் மலையே
மாநில மீ தது போற் பிறி திலையே
இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே
இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே
பன்னரு முபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை யேதொரு நூலிது போலே
பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே
போற்றுவ மிஃதை யெமக்கில்லை யீடே. (1)

மாரத வீரர் மலிந்தநன் னாடு
மாமுனி வோர்பலர் வாழ்ந்த பொன் னாடு
நாரத கான நலந்திகழ் நாடு
நல்லன யாவையு நாடுறு நாடு
பூரண ஞானம் பொலிந்த நன்னாடு
புத்தர் பிரானருள் பொங்கிய நாடு
பாரத நாடு பழம்பெரு நாடே
பாடுவ மிஃதை யெமக்கில்லை யீடே. (2)

இன்னல் வந் துற்றிடும் போததற் கஞ்சோம்
ஏழைய ராகி யினி மண்ணிற் றுஞ்சோம்
தன்னலம் பேணி யிழி தொழில் புரியோம்
தாய்த்திரு நாடெனி லினிக்கையை விரியோம்
கன்னலுந் தேனும் கனியுமின் பாலும்
கதலியும் செந்நெலு நல்குமெக் காலும்
உன்னத பாரத நாடெங்கள் நாடே
ஓதுவ மிஃதை யெமக்கிலை யீடே. (3)

---

## ஜாதீய கீதம்.

1

(பங்கிம் சந்திர சட்டோபாத்யாயர் வங்காளியில் இயற்றியது)

ஸுஜலாம், ஸுபலாம், மலயஜ சீதளாம்
ஸஸ்ய ஸ்யாமளாம் மாதரம் (வந்தே)

சுப்ர ஜ்யோத் ஸ்னா புளகித யாமினீம்
புல்ல குஸுமித த்ரும தள சோபினீம்
ஸுஹாஸினீம் ஸுமதுர பாஷிணீம்
ஸுகதாம், வரதாம், மாதரம் (வந்தே மாதரம்) 1

த்ரிம்சத் கோடி கண்ட கல கல நிநாத கராலே
த்வித்ரிம்சத் கோடி புஜைர் த்ருத கர கர வாலே
கேபலே, மாதுமி அபலே
பஹுபல தாரிணீம், நமாமி தாரிணீம்
ரிபுதல வாரிணீம், மாதரம் (வந்தே மாதரம்) 2

துமி வித்யா துமி தர்ம,
துமி ஹ்ருதி துமி மர்ம
தவம்ஹி ப்ராணா சரீரே
பாஹுதே துமி மா சக்தி
ஹ்ருதயே துமிமா பக்தி
தோமா ரேயி ப்ரதிமா கடி மந்திரே மந்திரே (வந்) 3

த்வம் ஹி துர்க்கா தசப்ரஹரண தாரிணீ
கமலா கமலதல விஹாரிணீ
வாணீ வித்யா தாயினீ, நமாமித்வாம் (வந்தே) 4

நமாமி, கமலாம், அமலாம் அதுலாம்
ஸுஜலாம், ஸுபலாம் மாதரம்
ச்யாமளாம், ஸரளாம், ஸுஸ்மிதாம் பூஷிதாம்
பரணீம், தரணீம், மாதரம், (வந்தேமாதரம்) 5

---

## ஜாதீய கீதம்.

2

(பங்கிம் சந்திர சட்டோபாத்யாயர் எழுதிய ஜகத்பிரசித்திகொண்ட "வந்தே மாதரம்" கீதத்தின் மொழிபெயர்ப்பு.)

1

இனியநீர்ப் பெருக்கினை இன்கனி வளத்தினை
தனி நறு மலயத் தண் காற் சிறப்பினை
பைந்நிறப் பழனம் பரவிய வடிவினை

2

வெண்ணிலாக் கதிர் மகிழ் விரித்திடு மிரவினை
மலர் மணிப் பூத்திகழ் மரன் பல செறிந்தனை
குறுநகை யின்சொலார் குலவிய மாண்பினை
நல்குவை யின்பம் வரம்பல நல்குவை (வந்தே)

3

*முப்பது கோடிவாய் (நின்னிசை) முழங்கவும்
அறுபது கோடி தோ ளுயர்ந் துனக் காற்றவும்
திறனி லாள் என்றுனை யாவனே செப்புவன்—

---

*வங்காளி பாஷையிலே ஏழு கோடி யென்றே கூறியிருக்கின்றது: ஆனால் அது வங்காளத்தை மட்டிலுமே குறிப்பிட்டது. 30 கோடி இந்தியா முழுமையின் ஜனத்தொகை.

அருந்திற லுடையாய் அருளினை போற்றி
பொருந்தலர் படைபுறத் தொழித்திடும் பொற்பினை !

4

நீயே வித்தை நீயே தருமம்
நீயே யிதயம் நீயே மருமம்
உடலகத் திருக்கு முயிரு மன்னீயே
தடந் தோ ளகலாச் சத்தி நீயம்மே ! (வந்தே)

5

சித்த நீங் காதுறு பத்தியு நீயே
ஆலயந் தோறு மணி பெற விளங்கும்
தெய்விக வடிவமுந் தேவி யிங் குனதே. (வந்தே)

6

ஒருபது படை கொளு முமைய வணீயே
கமல மெல் லிதழ்களிற் களித்திடுங் கமலை நீ
வித்தை நன்கருளும் வெண்மலர்த் தேவிநீ

7

போற்றி ! வான் செல்வீ, புரையிலை நிகரிலை
இனிய நீர்ப் பெருக்கினை, இன்கனி வளத்தினை,
சாமள நிறத்தினை, சரளமாந் தகையினை
இனிய புன் முறுவலாய் ! இலங்கு நல்லணி யினை !
தரித்தெமைக் காப்பாய் தாயே போற்றி ! (வந்தே)

# ஜாதீய கீதம்.

## 3

(பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர் எழுதிய ஜகத்பிர சித்திகொண்ட "வந்தே மாதரம்" கீதத்தின் புதிய மொழி பெயர்ப்பு.)

நளிர்மணி நீரும், நயம்படு கனிகளும்
குளிர் பூந் தென்றலும், கொழும்பொழிற் பசுமையும்
வாய்ந்து நன் கிலகுவை, வாழிய அன்னை! (வந்தே) (1)

தெண்ணில வதனிற் சிலிர்த்திடு மிரவும்,
தண்ணியல் விரிமலர் தாங்கிய தருக்களும்
புன்னகை யொளியும், தேமொழிப் பொலிவும்
வாய்ந்தனை யின்பமும் வரங்களு நல்குவை (வந்தே) (2)

கோடி கோடி குரல்க ளொலிக்கவும்
கோடி கோடி புயத்துணை கொற்றமார்
நீடு பல்படை தாங்கி முன் னிற்கவும்
கூடு திண்மை குறைந்தனை யென்பதென்?
ஆற்றலின் மிகுந்தனை, அருபதங் கூட்டுவை
மாற்றலர் தமது வன்படை யோட்டுவை (வந்தே) (3)

அறிவுநீ, தருமநீ, உள்ளநீ, அதனிடை
மருமநீ உடற்கண் வாழ்ந்திடு முயிர்நீ,

தோளிடை வன்புநீ, நெஞ்சகத் தன்புநீ
ஆலயந்தோறும் அணிபெற விளங்கும்
தெய்வச் சிலையெலாந் தேவியிங் குனதே (வந்தே) (4)

பத்துப் படைகொளும் பார்வதி தேவியும்
கமலத் திதழ் களிற் களித்திடும் கமலையும்
அறிவினை யருளும் வாணியும் அன்னைநீ (வந்தே) (5)

திரு நிறைந்தனை, தன்னிக ரொன்றிலை
தீது தீர்ந்தனை நீர்வளஞ் சார்ந்தனை
மருவு செய்களின் நற்பயன் மல்குவை
வளனின் வந்ததொர் பைந்நிறம் வாய்ந்தனை
பெருகு மின்ப முடையை, குறுநகை
பெற் றொளிர்ந்தனை, பல்பணி பூண்டனை
இரு நிலத்தின்வந் தெம்முயிர் தாங்குவை
எங்கள் தாய் நின் பதங்க ளிறைஞ்சுவாம் (வந்தே) (6)



இந்தியா அச்சுக்கூடம், சென்னை.

பூலோகத்தில்

தர்ம ஸ்தாபனம்

செய்வதற்காக

சகல மதங்களுக்கும் பொதுவான

# கடவுள்

அவதாரமாய்

## விரைவில்

# வருகின்றார்.

அதிகாலையில் எழுந்திருங்கள்.

காலை மாலைகளில் விசேஷ பிரார்த்தனை செய்யுங்கள்

தேவாலயங்களில் விசேஷ பிரார்த்தனை, பூஜை, அ சனை முதலியன செய்யுங்கள். ஒவ்வொருவரும் உங்கள் ம தெய்வங்களைப் போற்றுங்கள். பாவத்திலிருந்து விலகுங்க பாவிகள் தண்டிக்கப்படுவார்கள். புண்யவான்கள் நன் அடைவார்கள். தர்மத்தையும் சத்தியத்தையும் உறுதிய பின் பற்றுங்கள். கடவுளை நம்புங்கள். கடவுளுக்குப் பயப்படு கள். கடவுள் நாமத்தை கோஷியுங்கள். கடவுள் துணை.

பரலி. சு. நெல்லையப்பன்.

உ

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் பாடிய

# முரசு



பரலி. சு. நெல்லையப்ப பிள்ளையால்

பதிப்பிக்கப்பட்டது.

---

அரையணா

# முகவுரை.

---

இச் சிறிய நூல் அரிய நீதிகளைக் கொண்டது; தமிழர்களால் வேதமெனக் கொள்ளத் தக்கது. இதிலுள்ள பாடல்கள் தங்க ஏடுகளில் நவரத்ன எழுத்துக்களால் பொறித்தற் குரியன.

சென்னை:
சிந்தாதிரிப்பேட்டை
காளயுக்தி, சித்திரை.

நெல்லையப்பன்.

ஆசிரியர் சுப்பிரமணிய பாரதியார் பாடிய

# முரசு.

---

ஊருக்கு நல்லது சொல்வேன்—எனக்
குண்மை தெரிந்தது சொல்வேன்
சிருக்கெல்லா முதலாகும்—ஒரு
தெய்வந் துணை செய்ய வேண்டும். க

வேத மறிந்தவன் பார்ப்பான்—பல
வித்தை தெரிந்தவன் பார்ப்பான்
நீதி நிலை தவறாமல்—தண்ட
நேமங்கள் செய்பவன் நாய்க்கன். உ

பண்டங்கள் விற்பவன் செட்டி—பிறர்
பட்டினி தீர்ப்பவன் செட்டி
தொண்டரென் றோர்வகுப் பில்லை—தொழில்
சோம்பலைப் போலிழி வில்லை. ங

நாலு வகுப்புமிங் கொன்றே—இந்த
நான்கினி லொன்று குறைந்தால்
வேலை தவறிச் சிதைந்தே—செத்து
வீழ்ந்திடு மானிடச் சாதி. ச

ஒற்றைக் குடும்பந் தனிலே—பொருள்
ஓங்க வளர்ப்பவன் தந்தை
மற்றைக் கருமங்கள் செய்தே—மனை
வாழ்ந்திடச் செய்பவ ளன்னை. ரு

ஏவல்கள் செய்பவர் மக்கள்—இவர்
யாவரு மோர் குல மன்றோ?
மேவி யனைவரு மொன்றாய்—நல்ல
வீடு நடத்துதல் கண்டோம். சு

சாதிப் பிரிவுகள் சொல்லி—அதில்
தாழ்வென்று மேலொன்றும் கொள்வார்
நீதிப் பிரிவுகள் செய்வார்—அங்கு
நித்தமும் சண்டைகள் செய்வார். எ

சாதிக் கொடுமைகள் வேண்டாம்—அன்பு
தன்னிற் செழித்திடும் வையம்
ஆதரவுற்றிங்கு வாழ்வோம்—தொழில்
ஆயிர மாண்புறச் செய்வோம். அ

பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
பேணி வளர்த்திடு மீசன்

மண்ணுக்குள்ளே சில மூடர்—நல்ல
மாத ரறிவைக் கெடுத்தார். ௯

கண்க ளிரண்டினி லொன்றைக்—குத்திக்
காட்சி கெடுத்திட லாமோ?
பெண்க ளறிவை வளர்த்தால்—வையம்
பேதமை யற்றிடுங் காணீர். ௧௦

தெய்வம் பல பலச் சொல்லிப்—பகைத்
தீயை வளர்ப்பவர் மூடர்
உய்வ தனைத்திலு மொன்றாய்—எங்கும்
ஓர் பொரு ளானது தெய்வம். ௧௧

தீயினைக் கும்பிடும் பார்ப்பார்—நித்தந்
திக்கை வணங்குந் துருக்கர்
கோயிற் சிலுவையின் முன்னே—நின்று
கும்பிடும் யேசு மதத்தார் ௧௨

யாரும் பணிந்திடும் தெய்வம்—பொருள்
யாவினும் நின்றிடும் தெய்வம்
பாருக்குள்ளே தெய்வ மொன்று—இதிற்
பற்பல சண்டைகள் வேண்டாம். ௧௩

வெள்ளை நிறத்தொரு பூனை—எங்கள்
வீட்டில் வளருது கண்டீர்
பிள்ளைகள் பெற்றந்தப் பூனை—அவை
பேருக் கொரு நிறமாகும். ௧௪

சாம்பல் நிறமொரு குட்டி—கருஞ்
சாந்து நிறமொரு குட்டி
பாம்பு நிறமொரு குட்டி—வெள்ளைப்
பாலி னிறமொரு குட்டி. ௧௫

எந்த நிற மிருந்தாலும்—அவை
யாவு மொரேதர மன்றோ?
இந்த நிறம் சிறிதென்றும்—இஃ
தேற்ற மென்றுஞ் சொல்லலாமோ? ௧௬

வண்ணங்கள் வேற்றுமைப் பட்டால்—அதில்
மானுடர் வேற்றுமை யில்லை.
எண்ணங்கள் செய்கைக ளெல்லாம்—இங்கு
யாவர்க்கு மொன்றெனல் காணீர். ௧௭

நிகரென்று கொட்டு முரசே—இந்த
நீணிலம் வாழ்பவ ரெல்லாம்

தகரென்று கொட்டு முரசே—பொய்மைச்
சாதி வகுப்பினை யெல்லாம். ௧௮

அன்பென்று கொட்டு முரசே—அதில்
ஆக்க முண்டாமென்று கொட்டு
துன்பங்கள் யாவுமே போகும்—வெறுஞ்
சூதுப் பிரிவுகள் போனால். ௧௯

அன்பென்று கொட்டு முரசே—மக்கள்
அத்தனை பேரும் நிகராம்
இன்பங்கள் யாவும் பெருகும்—இங்கு
யாவரு மொன்றென்று கொண்டால். ௨௦

உடன்பிறந் தார்களைப் போலே—இவ்
வுலகில் மனித ரெல்லாரும்.
இடம் பெரிதுண்டு வையத்தில்—இதில்
ஏதுக்குச் சண்டைகள் செய்வீர்? ௨௧

மரத்தினை நட்டவன் தண்ணீர்—நன்கு
வார்த்ததை யோங்கிடச் செய்வான்
சிரத்தை யுடையது தெய்வம்—இங்கு
சேர்த்த வுணவெல்லை யில்லை. ௨௨

வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர்—இங்கு
வாழு மனிதரெல் லோர்க்கும்
பயிற்றி யுழு துண்டு வாழ்வீர்—பிறர்
பங்கைத் திருடுதல் வேண்டாம். ௨௩

உடன் பிறந்தார்களைப் போலே—இவ்
வுலகில் மனிதரெல் லாரும்
திடங் கொண்டவர் மெலிந்தோரை—இங்கு
தின்று பிழைத்திட லாமோ? ௨௪

வலிமையுடையது தெய்வம்—நம்மை
வாழ்ந்திடச் செய்வது தெய்வம்
மெலிவு கண்டாலுங் குழந்தை—தன்னை
வீழ்த்தி மிதித்திட லாமோ? ௨௫

தம்பி சற்றே மெலிவானால்—அண்ணன்
தானடிமை கொள்ள லாமோ?
செம்புக்குங் கொம்புக்கு மஞ்சி—மக்கள்
சிற்றடிமைப் பட லாமோ? ௨௬

அன்பென்று கொட்டு முரசே—அதில்
யார்க்கும் விடுதலை யுண்டு

பின்பு மனிதர்க ளெல்லாம்—கல்வி
பெற்றப் பதம் பெற்று வாழ்வார். உஎ

அறிவை வளர்த்திட வேண்டும்—மக்கள்
அத்தனை பேருக்கு மொன்றாய்
சிறியரை மேம்படச் செய்தால்—பின்பு
தெய்வ மெல்லோரையும் வாழ்த்தும். உஅ

பாருக்குள்ளே சமத்தன்மை—தொடர்
பற்றுஞ் சகோதரத் தன்மை
யாருக்குந் தீமை செய்யாது—புவி
யெங்கும் விடுதலை செய்யும். உகூ

வயிற்றுக்குச் சோறிடவேண்டும்—இங்கு
வாழு மனிதருக் கெல்லாம்
பயிற்றிப் பல கல்வி தந்து—இந்தப்
பாரை யுயர்த்திட வேண்டும். ௩0

ஒன்றென்று கொட்டு முரசே—அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே
நன்றென்று கொட்டு முரசே—இந்த
நானில மாந்தருக் கெல்லாம். ௩க

---

*Madras Diamond Press, Periamet.*

உ

# வந்தே மாதரம்.

## ஸ்ரீ ஸி. சுப்ரமணிய பாரதியார் நூல்கள்.



### கண்ணன் பாட்டு.

ஸ்ரீ கண்ணபிரானின் லீலாவிநோதங்களைப் புகழ்வது; மேதாவிகளால் புகழைப் பெற்றது. விலை அணா 4.

### நாட்டுப் பாட்டு.

தமிழர்களின் சுதேசகீதம். மிகவும் அற்புதமான பாடல்கள். தமிழர்கள் ஒவ்வொருவரும் படிக்கவேண்டியது அணா 1.

### எங்கள் தாய்

நாட்டுப்பாட்டு இரண்டாம் பாகம் அணா 3.

பாலி. சு. நெல்லையப்ப பிள்ளை,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.

உ

ஓம்:

# பாரததேவி பஜனை.

(உதய ராகம்):

இந்த்யதேவி நமோஸ்துதே ஜெய
இந்த்ய மாதா நமோஸ்துதே
இந்த்யத் தாயே நமோஸ்துதே ஜெய
இந்த்யசக்தி நமோஸ்துதே
தேவிதேவி நமோஸ்துதேஜெய தேவிமாதா நமோஸ்துதே
வீர்யதேவி நமோஸ்துதேஜெய வீரமாதா நமோஸ்துதே.

## வந்தேமாதர ஸங்கீர்த்தனம்.

### வந்தேமாதரம்.

ஜய ஜய பாரத ஜய ஜய பாரத ஜய ஜய பாரத …… ஜய
ஜய ஜய இந்த்ய ஜய ஜய இந்த்ய ஜய ஜய இந்த்ய …… ஜய

## மனத்தொடு கிளத்தல்.

1. அம்மை இந்தியளை, மனமே, அன்பாய் நினைப்பாயேல்,
ஆதிபகவதியை, மனமே, அன்பாய் நினைப்பாயேல்
ஜோதி ஸ்வராஜ்ஜியம்தான், மனமே, ஸொந்தமதாகாதே:

2. எங்கும் நிறைபொருளை, மனமே, எண்ணிப்பணிவாயேல்
தங்கும் ஸ்வய ஆக்ஷி, மனமே, சந்ததம் சேறுவையே
3. ஒன்றைப் பிடித்தோர்க்கே, மனமே,
ஹோம் ருல் வசப்படுமே
நின்ற நிலைதனிலே, மனமே, நேர்மை அறிவாயே
4. எல்லாம் இருந்தாலும், மனமே,
ஸ்வேச்சை இல்லை எனில் (நாம்)
இல்லாத தன்மை என்றே, மனமே, ஏங்கித் தவிப்பாயே
5. சொல்லொன்று நற்பொருளாம், மனமே
ஜோதியைப் போற்றுக்கால்
பரஞ்ஜோதியைப் போற்றுக்கால்
மோஹனகாந்தியைப் போற்றுக்கால்
இல்லென்று முக்திநில்லை, மனமே, எப்பொருளும் சொலுமே

## தேச பஜனை.

1. இந்த்ய தேசம் பஜே—இந்த்ய தேசம்—திவ்ய
இந்த்ய தேசம் பஜே—இந்த்ய தேசம்.
2. பாரததேவீம் பஜே—பாரததேவீம்—ஸ்ரீமத்
பாரததேவீம் பஜே—பாரததேவீம்.
3. பங்கஜ விலோசனம்—இந்த்ய தேசம்—பக்த
ஸங்கட விமோசனம்—இந்த்ய தேசம்.
4. அஜ்ஞான நாசகம்—இந்த்ய தேசம்—பக்த
விஜ்ஞான பாலகம்—இந்த்ய தேசம்.
5. கருணபயோ நிதிம்—இந்த்ய தேசம்—பவ்ய
சரணாகத நிதிம்—இந்த்ய தேசம்.
6. ரக்ஷித ஜகத்ரயம்—இந்த்ய தேசம்—சக்ர
சிக்ஷிதா ஸாரயம்—இந்த்ய தேசம்.

நம: பாரத தேவ்யை :— ஜய ஜய பாரத
இந்த்ய மஹாராஜ்ஞிகி :— ஜே.
ஸ்ரீ பாரததேவிகி :— ஜே.
இந்த்ய தேவ்யை :— ஜகத் அம்பிகே.

வந்தேமாதர ஸங்கீர்த்தனம் } வந்தேமாதரம்.

## ஜெகதம்பிகையின் பக்தி மேலீடு.

### (ப்ருமானந்த பெருக்கு.)

[இராகம்—தெண்டகம். ரூபகதாளம்].

பல்லவி.

பக்தி பண்ணிக்கொண்டிருந்தால் முக்தி பெறலாமே.

அநுபல்லவி.

எத்திசையும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய் நிறைந்திருக்கும்
வஸ்துவென்று அம்பாளவள் மலரடி தினம்தோறும். ()

சரணங்கள்.

பச்சைமரத், தாணிபோலே—பரிந்துமனம் நாடி
பாரதமா, தாவேஎனப்—பலவகையாய்ப் பாடி
இச்சை ஒழி, யும்புலன்கள்—ஐந்துமிக வாடி
ஏகாந்த, மானபரி—பூரணத்தைத் தேடி
அச்சமறந், திருவிழியில்—ஆனந்தநீர் கரைபுரள
அருளேபரம், பொருளே எமக் கருளே ஸுயராஜ்யம்
[என. (பக்தி)

# இந்த்யதேவி பஜனை.

[கேதாரம்—ஆதிதாளம்].

1. ஆரியபூஷண இந்த்யதேவி—மாம்
   பாஹி கல்யாணகுண இந்த்யதேவி.
2. நித்ய மஹோத்ஸவ இந்தியதேவி—மாம் —— தேவி.
3. நித்யாநந்த இந்த்யதேவி—மாம் —— தேவி.
4. நவசக்தி பூஷித இந்த்யதேவி—மாம் —— தேவி.
5. நவ்ரோஜி பூஜ்யத இந்த்யதேவி—மாம் —— தேவி.
6. பக்தவத்ஸல இந்த்யதேவி—மாம் —— தேவி.
7. மஹமட் ரஞ்சித இந்த்யதேவி—மாம் —— தேவி.
8. பாரதமாத்ரே இந்த்யதேவி—மாம் —— தேவி.
9. பரவசநாசக இந்த்யதேவி—மாம் —— தேவி.
10. பார்ஸி ரக்ஷித இந்த்யதேவி—மாம் —— தேவி.
11. த்ராவ்ட ஜனப்ரிய இந்த்யதேவி—மாம் —— தேவி.
12. திலக ஸேவித இந்த்யதேவி—மாம் —— தேவி.
13. டாகூர் ரஞ்சித இந்த்யதேவி—மாம் —— தேவி.
14. துக்கவிமோசக இந்த்யதேவி—மாம் —— தேவி.
15. கந்தி கங்காதர இந்த்யதேவி—மாம் —— தேவி.
16. ஸர்வ சக்திமய இந்த்யதேவி—மாம் —— தேவி,
17. ரஜ்புத்ர ஸேவித இந்த்யதேவி—மாம் —— தேவி.
18. புத்தஜனப்ரிய இந்த்யதேவி—மாம் —— தேவி.
19. அரவிந்தலோசன இந்த்யதேவி—மாம் —— தேவி.
20. அக்பர் ரஞ்சித இந்த்யதேவி—மாம் —— தேவி.
21. ஆத்மவசப்ரிய இந்தயதேவி—மாம் —— தேவி.
22. ஸ்வதந்த்ரப்ரிய இந்த்யதேவி—மாம் —— தேவி.
23. துஷ்ட நிக்ரஹ இந்தயதேவி—மாம் —— தேவி.

24. சிஷ்டபரிபாலன இந்த்யதேவி—மாம் —— தேவி.
25, வந்தேமாதரம் இந்த்யதேவி—மாம் —— தேவி.

வந்தேமாதர ஸங்கீர்த்தனம் } வந்தேமாதரம்.

## ஸ்வதேச கும்மி.

ஆதிமறை நாதம்தரும் எங்கள் இந்தியதேசம்
ஜோதிமய மானஸ்தலம் எங்கள் இந்தியதேசம்
பூதேவி ஜோதிமுகம் எங்கள் இந்தியதேசம்
பரதகண்டம் என அழைப்பதும் எங்கள் இந்தியதேசம்
காந்திதனை ஏந்திவரும் எங்கள் இந்தியதேசம்
சாந்திதனைச் சாற்றிவரும் எங்கள் இந்தியதேசம்
அரவிந்தன் அகத்தொளிரும் எங்கள் இந்தியதேசம்
அரவிந்தை அணைந்தமரும் எங்கள் இந்தியதேசம்
திலகமணி இலகவரும் எங்கள் இந்தியதேசம்
கலகம் எதும் விலகவரும் எங்கள் இந்தியதேசம்
சந்த்ரபாலர் லஜ்பதிராய் எங்கள் இந்தியதேசம்
சந்ததமும் சிந்தனைசெய் எங்கள் இந்தியதேசம். (1)

தர்மமதைத் தாங்குபவள் எங்கள் பாரதமாதா
வர்மமதை வாங்குபவள் எங்கள் பாரதமாதா
நவ்ரோஜி நாடியவள் எங்கள் பாரதமாதா
பவரோகம் பார்த்தழிப்பாள் எங்கள் பாரதமாதா. (2)

ஆடிநிற்கும் காளியவள் எங்கள் இந்தியதேவி
கோடிமக்கள் கூடிவரும் எங்கள் இந்தியதேவி
குடியரசின் முடியுடையாள் எங்கள் இந்தியதேவி
மிடியகலச் செய்பவளும் எங்கள் இந்தியதேவி

சூரர்கண்டு போற்றுமந்த எங்கள் இந்தியதேவி
வீரகண்டாமணி யுடையாள் எங்கள் இந்தியதேவி
சிங்காஸ னம் அமரும் எங்கள் இந்தியதேவி
சிங்கங்களைப் பெற்றெடுப்பாள் எங்கள் இந்தியதேவி. (3)
கேசரியில் ஊருபவள் எங்கள் பாரததேவி
பேசரியபலம் உடையாள் எங்கள் பாரததேவி
வானளாவி வாழுமலை எங்கள் இமயமலையே
வானதி பாயும்மலை எங்கள் இமயமலையே
கௌரிசங்கர் வாழுமலை எங்கள் இமயமலையே
கஞ்சிஞ்சிங்கா ஓங்கும் இடம் எங்கள் இமயமலையே
இந்தியதேவியின் சிரஸிருப்பதும் எங்கள் இமயமலையில்
(அவள்)அளகபாரம்அமர்ந்திருப்பதும்எங்கள்இமயமலையில்
சத்தலத்துவ வெள்ளி அம்பலம் ஓங்கிநிற்கும் இமயம்
ஸுயப்ரகாசம் பெற்றதோர் ஜகத்குருவாழ் இமயம். (4)
மஹரிஷிகள் தவம்செய்வதும் எஙகள் விந்தியமலையில்
மாதாவின் இடையமர்வதும் எங்கள் விந்தியமலையில்
ஜெயினர்களின் சிறந்த ஆலயம் எங்கள் அரவலிமலையில்
மாதாவின் வலக்கரமாம் எங்கள் அரவலிமலையில். (5)
சந்தனமரம் செழித்துயர்வதும் எங்கள் மேற்குத்தொடரில்
கந்தம் லவங்கம் காய்த்திடுவதும்எங்கள்மேற்குத்தொடரில்
பொன்கொழிப்பதும் புனல்சுழிப்பதும் எங்கள் கிழக்குத்தொ
[டரில்
பொங்குமுப்போகம் விளைந்திடுவதும் எங்கள் கிழக்குத்
[தொடரில். (6)
வங்காளக்கடல் அரபிக்கடலும் ஆடையதாய் அமைய
சிந்து கங்கா ஹாரங்களும் சிறந்து மிகவிளங்க
நிலவளத்தைப் பெருக்குவதும் எங்கள் கங்காநதியே
ஜீவன்களை உய்விப்பதும் எங்கள் கங்காநதியே

முக்திபெற மார்க்கமாவதும் எங்கள் காசிஸ்தலமே
முன்னோர்கள் புகழ்ந்திருப்பதும் எங்கள் காசிஸ்தலமே
அன்புமய மானந்தமயமாய் அம்மையவள் ஹ்ருதயம்
அழகாக அமர்ந்திருப்பதும் எங்கள் காசிஸ்தலத்தில்
மண்டலத்தோர் புகழ்ந்துபோற்றும் மஹாதேவியாம் இந்திய
மாதாவின் திருப்பாதங்கள் மதராஸில் காணீர் [தேச
மாதாவின் திருமந்திரத்தை மனதுடனே நாமும்
வந்தேமாதரம் என்றுமே ஜெபித்துமஹத்துடனேவாழ்வோம்

## பாரததேவி பாதம் பணிதல்.

[இராகம். செஞ்சுருட்டி — ரூபகதாளம்].
(சிவலோகநாதனைக்கண்டு என்னும் வர்ணமெட்டு).

பல்லவி.

பாரதமா தாவைக்கண்டு பணிந்துதொழுவோம் வாரீர்

அநுபல்லவி.

பவ பயங்களைப்போக்கி அவள்
பரம பதத்தைக் கொடுப்பாள் அந்த (பாரத)

சரணங்கள்.

அற்பசுகத்தை நினைந்தோம்—அவள் திருவடிமறந்தோம்
கற்பிதமான பிரபஞ்சமீது—கானல்ஜலம்போல எண்ணி ()
ஆருத்துயரில்விழுந்தோம்—இனி ஆத்மவசத்தை இழந்தோம்
பாசமகல வழிதேடாமல்—பரதவிக்கும் பாவிகளானோம் ()
மானுட ஜன்மம்கொடுத்தாள்—தன்னைவருந்தக் கரங்கள்
[அளித்தாள்
தேனும் பாலும்போலே சென்று—தேவி அருகில் நின்றுகொ
[ண்டு. (பாரத)

## பஜனை நாமாவளி.

1. தீனதயாளோ—தீனதயாளோ
   தீனதயாபர—தேவிதயாளோ.
2. இந்திய நாடே—எந்தம தயிரே
   முந்தியமாண்பினை—முந்தற அருளாய்.
3. சிந்தனை செய்தனை—வந்தனைசெய்தனம்
   முந்தியமாண்பினை—முந்தற அருளாய்.
4. பக்தி யுண்டானால்—சக்தி உண்டாகும்
   பரவச பந்தங்கள்—பறந்தோடிப்போகும்.

## பக்தர்களை பஜித்தல்.

1. ஜே ஜே மஹராஜ்—ஜார்ஜ் மஹராஜ்
   ஜே ஜே மஹராஜ் ஜே—ஜார்ஜ் மஹராஜ்
2. ஜே ஜே டிலாக் ஜே—ஜே டிலாக்
   ஜே ஜே டிலாக் ஜே—ஜே ஜே டிலாக்
   கந்தி டிலாக்—கங் காதர டிலாக் மோஹன்
   கந்தி டிலாக்—கங்—காதர டிலாக்.
3. தாதாபாய் நவ்ரோஜி—டாடா ரானடே கந்திரிஷி
   டிலாக் டாகூர் பால் அரவிந்தர் திருவடி ஜே ஜே போற்றி.
4. தாதாபாய் நவ்ரோஜி—ஸ—ரோஜினிதேவி நவ்ரோஜி
   தயாநந்தர் நவ்ரோஜி—வி—வேகாநந்தர் நவ்ரோஜி.

## ஸ்வதந்திர வாழ்வு.

1. ஸ்வதந்திர வாழ்வே ஸுகவாழ்வு—சுத்த
   [ஸத்வப் பிரும்மம் ஆம் வாழ்வு.
2. ஸ்வதந்திர......வாழ்வு—எம் விவேகாநந்தர் மகிழ்வாழ்வு.

3. ஸ்வதந்திர......வாழ்வு—ஸத்ய கந்தி மகரிஷி கிரகவாழ்வு
4. ஸ்வதந்திர......வாழ்வு-நம் பக்தர் நவ்ரோஜி புகழ்வாழ்வு
5. ஸ்வதந்திர......வாழ்வு—எம் பாலகங்காதரர் புகழ்வாழ்வு
6. ஸ்வதந்திர......வாழ்வு-நம் ஜனனஸ்வதந்திரம்ஆம்வாழ்வு
7. ஸ்வதந்திர......வாழ்வு—எம் ஸாயப்ரகாசம்தரும் வாழ்வு
8. ஸ்வதந்திர......வாழ்வு-மிக சுத்தமெய்ஞான உயர்வாழ்வு

## ஆனந்தக்களிப்பு.

காணுமலிருக்கலாகாது—பாழுங்
கட்டை கடைத்தேற வேண்டியிருந்தால் (காணு)

முக்தி அளித்திடும் பாதம்—இந்த்யர் முப்பத்து முக்கோடி
பூஜிக்கும் பாதம்
சக்திக்கிணையான பாதம்—வேத சாஸ்திரங்களெல்லாம்
தேடிய பாதம். (காணு)

## முறையீடு.

வாடுகின்ற மானிடர்கள் தேடுகின்ற செல்வமே
நாடுகின்ற தேசமன்றில் ஆடுகின்ற அம்மையே
அம்மை என்ற நின்னையே அடிபணிந்து அன்புடன்
நித்தம் நித்தம் நாங்களும் நினைப்பது என்ன பாரமோ.

சிந்தை அன்புசேரவே நைந்து நின்னை நாடினேம்
வந்து வந்தளின்பமே தந்திரங்கு தாயரே
இந்த்யதேசம் யாவும்நீ கொண்டுநின்ற கோலமே
தொண்டர்கண்டு சொரிகணீர் கண்ட நெஞ்சுகரையுமே.

அன்னைபோல அருள்மிகுந்து மன்னுஞான தேவியே
என்னையே எனக்களித்த நின்னையானு நினைவனே.

## தேவியிடம் முறையிடுதல்.

காதல் தணியேனே கண்டு மகிழேனே
காதல் தவிரேனே சங்கடந்தான் தீரேனே
உன்னைத் துதியேனே ஹர்காடி வாரேனே
பொன்னடியைப் பாரேனே பூரித்து நில்லேனே
ஓங்கார பொற்சிலம்பின் உல்லாஸம் பாரேனே
பாங்கான தண்டை பலபணியும் பாரேனே
வீர கண்டாமணியின் வெற்றிதனைப் பாரேனே
சூரர்கண்டு போற்றுமந்த சுந்தரத்தைப் பாரேனே
அருள்பழுத்த மாமதியாம் ஆனந்தம் பாரேனே
திருநயனச்சடை ஒளிரும் செழுங்கொழுமை பாரேனே
முல்லைநிலவெறிக்கும் ஹரலொளி பாரேனே
அல்லால் புருவத்தழகுதனைப் பாரேனே
வீசுகரமும் விகசிதமும் பாரேனே
ஆசையளிக்கும் அபயகரம் பாரேனே
சிங்காஸனம் அமரும் சிங்காரம் பாரேனே
அங்கனியை வென்ற அதரத்தைப் பாரேனே
கரத்திலொளிரும் திரிசூலம் காணேனே
கேசரியிலூரும் காக்ஷிதனைக் காணேனே
நோயுண்ணவே மெலிந்து நொந்தநாள் போதாதோ
பேயுண்ணப் பேயாய்ப் பிறந்தநாள் போதாதோ
மானம் அழிந்து மடிந்தநாள் போதாதோ
ஈனப் பொசுப்பில் இளைத்தநாள் போதாதோ
பட்டகளையும் பரதவிப்பும் போதாதோ
கெட்டநாள் கெட்டாலும் கிருபையினிப் பாரம்மா
இல்லாமைக்கே யழுது நின்றநாள் போதாதோ
எல்லாருமென் பாரமெடுத்தநாள் போதாதோ

# ஸ்ரீ பாரததேவி அஷ்டோத்ரம்.

1. ஓம் ஸ்ரீ பாரத மாத்ரே நம:
2. ~~ஸ்ரீ ப்ரதிநிதி ஜார்ஜ் மஹாராஜ் பரிபாலன்யை நம:~~
3. பாலகங்காதர திலக ஸேவிதாயை நம:
4. பார்ஸி ரக்ஷிதாயை நம:
5. பாரத புத்ர ரஞ்சிதாயை நம:
6. வந்தேமாதர மந்த்ர ரூபிண்யை நம:
7. வாணீரமா ஸேவிதாயை நம:
8. விக்னநாசின்யை நம:
9. வித்வன் மனோரஞ்சன்யை நம:
10. வித்யாயை நம:
11. விவேகாநந்த பூஜ்யாயை நம:
12. வீரமாத்ரே நம:
13. ஸர்வதுக்க நிவாரிண்யை நம:
14. ஸர்வபூத ஹித ப்ரதாயை நம:
15. ஸத்யக்ரஹாலங் க்ருதாயை நம:
16. ஸர்வ சக்திதராயை நம:
17. ஸர்வ மாங்கள்யை நம:
18. ஸர்வலோக நேத்ராயை நம:
19. ஸகலராஜ்ய பிக்ஷாரக்ஷிதாயை நம:
20. ஸகோதர பாவனையை நம:
21. ஸர்வவேதாந்த ஸம்வேத்யாயை நம:
22. ஸுப்ரமண்ய வீரப்ரதாபாயை நம:
23. ஸத்யானந்த ஸ்வரூபிண்யை நம:
24. ஸர்வலோக வசங்கர்யை நம:
25. ஸரோஜினி ஸ்தோத்ரப்ரியாயை நம:
26. ஸர்வாபரண பூஷிதாயை நம:

27. ஓம் ஸிவாஜி மஹீபதி ஸேவிதாயை நம :
28. ஸ்வதந்த்ர ப்ரியாயை நம :
29. ஸ்வராஜ்ய ப்ரதாயை நம :
30. சங்கர பகவத் பூஷிதாயை நம :
31. சைதன்ய கௌரங்ககுஹ வாஸின்யை நம :
32. அரவிந்த ஜனன்யை நம :
33. அபேதானந்த பூஜ்யாயை நம :
34. அசோக ஸேவிதாயை நம :
35. அன்ன பூர்ணேச்வர்யை நம :
36. அபயஹஸ்த தராயை நம :
37. அக்பர் மஹராஜ் அர்சிதாயை நம :
38. ஆர்ய தேவ்யை நம :
39. ஆத்ம வச பலப்ரதாயை நம :
40. ஆர்ய ஸமாஜ பூஜிதாயை நம :
41. ஆந்த்ர அலங்க்ருதாயை நம :
42. ஹர்ஷ வர்தன அர்சிதாயை நம :
43. [illegible] நம :
44. ஹிமாசல பர்வத ரக்ஷிதாயை நம :
45. ஹிந்து ஸமுத்ர தனயாயை நம :
46. ராமகிருஷ்ண ஹ்ருதய ப்ரகாசின்யை நம :
47. பக்த ப்ரியாயை நம :
48. பக்திமார்க போதஞயை நம :
49. பக்த வச்யாயை நம :
50. ப்ரும்மானந்த நிலயாயை நம ;
51. பந்த விமோசனின்யை நம :
52. பகவத் கீதாப்ரதாபாயை நம :
53. பரவச நாசின்யை நம :
54. பரஞ்சோதிஷே நம :

55. ஓம் புராதன வஸ்தவே நம:
56. புவனேச்வர்யை நம:
57. புத்தாவதார ப்ரலாபாயை நம:
58. பூலோக வசங்கர்யை நம:
59. [redacted] :
60. மஹமட் ரஞ்சிதாயை நம:
61. மஹா வித்யாராஞ்யை நம:
62. மஹா தேவ்யை நம:
63. மஹா மாயாரூபிண்யை நம:
64. மஹா பாதக நாசின்யை நம:
65. மஹா ஸத்ய மந்த்ரமூலாயை நம:
66. மஹா சக்தியை நம:
67. மஹா வீர்யாயை நம:
68. மஹா பலாயை நம:
69. மஹா ஸித்திதேவ்யை நம:
70. மஹா புத்திதேவ்யை நம:
71. மஹா மந்த்ர ஸமஷ்டியை நம:
72. மஹா காள்யை நம:
73. மஹா ஸரஸ்வத்யை நம:
74. மஹா லக்ஷ்மியை நம:
75. முக்தி நிலையாயை நம:
76. முஸல்மன் ரஞ்சிதாயை நம:
77. ரஜபுத்ர ஸேவிதாயை நம:
78. ரஜபுத்ர ஸைன்ய பலவீரப்ரதாபாயை நம:
79. ரபீந்த்ரநாத ரஞ்சன்யை நம:
80. ராஜயோக நிலையாயை நம:
81. ராம்மோஹன் ரஞ்சிதாயை நம:
82. ராம ராவணாதி வாஸஸ்தலாயை நம:

83. ஓம் நவதர்கா ஸேவிதாயை நம:
84. நானக் ரஞ்சிதாயை நம:
85. நித்ய ரூபிண்யை நம:
86. லாலா லஜபத்ர லீலப்ரதாபாயை நம:
87. கலாநாதாயை நம:
88. கங்கா, ஸிந்து, காவேரி மாலாதராயை நம:
89. கிருஷ்ண கோதாவரி அலங்காரிண்யை நம:
90. சந்திரபால ஜனன்யை நம:
91. தனதான்ய ஸமர்த்யை நம:
92. த்ரும்சத்கோடி வதனாயை நம:
93. ஷஷ்டிகோடி புஜபராக்ரமாயை நம:
94. தயானந்த தியானமூர்த்யை நம:
95. தாரித்ரிய தவம்சின்யை நம:
96. தப்தி நர்மதாதர தேவ்யை நம:
97. திராவிடஜன தல்யாயை நம:
98. ஸ்ரீமத் ஸிம்மாஸனேச்வர்யை நம:
99. ஸ்ரீமோஹன்தாஸ் கர்மகரிஷி ப்ரபூஜிதாயை நம:
100. ஸ்ரீ சக்ரஹ்ருதய வாஸின்யை நம:
101. ஸ்ரீ மஹாபாரத பாகவத ப்ரியாயை நம:
102. ஹயக்ரீவ ஹ்ருதயரூபிண்யை நம:
103. ஹனுமத் வீரப்ரதாப பூஷிதாயை நம:
104. கபீர் கமால்தாஸ் த்யானரூபிண்யை நம:
105. கன்யாகுமாரி வாஸின்யை நம:
106. காஞ்சிநகர ப்ரகாசின்யை நம:
107. ஸ்வராஜ்ய தவஜதராயை நம:
108. ஹ்ரீங்கார ரூபிண்யை நம:

ஸ்ரீபாரத தேவ்யை நம:

---

## தாயின் கிருபையைத் தனயன் வேண்டுதல்

[வர்ணமெட்டு :— மார்கழிமாதம் திருவாதிரைநாள்].

வந்தேமாதர மென்றே பாடுவோம், மகிழ்வாயுனை அம்மே
மனமொழிமெய்யில் மாண்புற உன்புகழ் தேடுவோமினி--அ
ஜாதிமதங்களைப் பாரோமினி யாம் ஜெகதம்பிகை அம்மே
ஜன்மமித் தேசத்திலெய்தினர் யாரும் ஸகோதரராம்—அ.
உத்தமவழிகளில் தத்தமக்கேன்ற வாறுழைத்திடுவோம்
சக்தியும் ; சுத்தயும் பக்தியும் சீலமும் தழைத்திடுவோம்
இந்தியதேவியின் சுந்தரபாதங்கள், இறைஞ்சிடுவோம்—அ.
சந்ததம் யாமெலாம் சிந்தித்திருப்பதும் ஸ்வராஜ்யமே--அ.

## ப்ருந்தாவனத்தில் பாரத பக்தன் தும்பியை வேண்டுதல்.

1. அல்லல்வலை அற்றதென்றே, தும்பீபற—நிறை
ஆத்மவசம் உற்றதென்றே தும்பீபற.
2. தொல்லை வினைநீங்கிற்றென்றே, தும்பீபற—பரஞ்
ஜோதியைக் கண்டோமென்றே தும்பீபற.
3. அஞ்ஞானம் போயிற்றென்று தும்பீபற—சுத்த
மெய்ஞ்ஞானம் வாய்த்ததென்று தும்பீபற.
4. தூக்கம் தொலைந்தது, துக்கமும் தொலைந்தது
நோக்கம் திறந்ததென்று தும்பீபற
ஊக்கம் விளைந்ததென்று தும்பீபற.
5. பாரதர் எழுந்தனர் பக்தியிடு பட்டனர்
பஜனை பலித்ததென்று, தும்பீபற—பர
மானந்தம் கொண்டோமென்று தும்பீபற.

## மஹரிஷிகள் மயிலாடலேக்கண்டு மஹிழ்தல்.

1. ஆடுமயிலே, நடமாடுமயிலே—எங்கள்
   ஆசுஷி ஸுமய ஆசுஷியென்று—ஆடுமயிலே.
2. ஆடு.........லே-நாங்கள் எல்லாரும் ஒன்றுஎன்று ஆடுமயிலே
3. ஆடு.........லே-அதிஆனந்தம் ஆத்மவசம் — ஆடுமயிலே
4. ஆடு.........லே-கந்திஸத்யக்ரஹ காந்திவீச—ஆடுமயிலே
5. ஆடு.........லே-எங்கள் பஜனைக்கு,ஏற்றபடி—ஆடுமயிலே

## கண்ணன் குழலூதல்.

1. ஸத்யக்ரஹத்திலே முக்தியுண்டாமென்றே
   ஸ்த்யமாய் ஊதுகுழல்—ஹே க்ருஷ்ண !
   ஸ்த்யமாய் ஊதுகுழல்.
2. ஆனந்தநிலைமை ஆத்மவசம் என்றே
   கானமாய் ஊதுகுழல்—ஹே க்ருஷ்ண !!
   கானமாய் ஊதுகுழல்.
3. இனி எமது அன்னையும் எழுந்தருள் செய்கவே
   இன்பமாய் ஊதுகுழல்—ஹே க்ருஷ்ண !!!
   இன்பமாய் ஊதுகுழல்.
4. கீதையின் கீர்த்தியும் (எங்கள்) க்ரஹங்களில் ஓங்கவே
   கீதமாய் ஊதுகுழல்—ஹே க்ருஷ்ண !!!!
   கீதமாய் ஊதுகுழல்.
5. பாரத தேவியின் பஜனையைப் பாடவே
   பாங்காக ஊதுகுழல்—ஹே க்ருஷ்ண !!!!!
   பாங்காக ஊதுகுழல்.
6. கவிமுத்து பஜனை கைவல்யம் சேர்க்குமென்றே
   கீர்த்தியாய் ஊதுகுழல்—ஹே கிருஷ்ண !!!!!!
   கீர்த்தியாய் ஊதுகுழல்.

Printed at the "SARASVATHI VILAS PRESS," Mayavaram. C.-1000.--1918.